# கணையாழி கதைகள்

## சப்பாத்திப்பழம்

ந.முத்துச்சாமி

பள்ளிக்கூடம் விட்டதும் அவனது பாதை சப்பாத்திப் புதர் வரையில் ஓடித் தேங்கி நின்றது. கிழக்கு மேற்கான தெரு. கிழக்கே தெற்கு வடக்காக ஓடும் சந்து. தெருவும் சந்தும் சேரும் இடத்தில் வலதுபுறம் கீழ் கையில் அந்தச் சப்பாத்திப் புதர் அடர்ந்து வேலியைத் தாண்டி வழிந்து கிடந்தது. புதரிலிருந்து 45 டிகிரி கோணத்தில் கொஞ்சம் தள்ளி, தெருவின் இடதுபுறம் தனித்து நின்ற வீட்டின் ஜன்னலில் அவள் தெரிந்தாள்.

நெற்றியில் பெரிதாகக் குங்குமப் பொட்டு. குருவியின் இறகுகளைப்போல இமைகள் படபடக்கின்றன. கீழ் இமையில் மை தீட்டி விழிக்கடையில் இமை மயிரைப் போலவே நீட்டி விட்டிருக்கிறாள். இத்தனையும் அவனுக்காகத்தான். அவன் விழிகளுக்கு அழகாகத் தோன்ற வேண்டும் என்பதற்காகவேதான் அவள் தினமும் புதுக் கவர்ச்சியோடு தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள். உலகமே அவனுக்கு அவளால் அழகிட்டுத் தெரிந்தது.

மஞ்சள் வெயில் புதர் முழுவதும் ஒளி பாய்ச்சிக் கொண்டிருந்தது. தனியாக ஒரு பழம் கனிந்திருந்தது அவன் மனதை இழுத்தது. அந்தப் பழத்தைப் பறிப்பது தான் இன்று அவன் லட்சியம். சப்பாத்திப் பழத்தின் சுவை அவனை எப்படிப் பிடித்துக் கொண்டது என்பது

அவனுக்கே தெரியவில்லை. இரவில் புத்தகத்தின் ஏடுகளைப் புரட்டுகிறபோது கூட அதன் பூ முட்கள் அவன் விரல்களில் நெருடிக் கொண்டிருக்கும். பழத்தைப் பறிப்பதற்கு நீண்ட ஒரு மூங்கில் முள் போதுமானது. அதை அவன் வேலியில் ஒடித்துக் கொள்வான். பழம் புதரில் விழுந்துவிடாமல் சப்பாத்தியை வளைத்துப் பிடித்து அதைப் பறிப்பது கொஞ்சம் சிரமம்தான். இடையில் அவளையும் பார்த்துக் கொள்ள வேண்டும். சப்பாத்திப் பழத்தைப்போல அவள் கன்னங்களில் சிவப்பேறுவதாக அவனுக்குத் தோன்றும். சிவந்த அந்தக் கன்னங்களில் விழும் குழிகூட, அவன் திறமையைக் கண்டு அவள் மகிழ்ந்து போவதால்தான்.

அவளுக்கும் ஒருநாள் சப்பாத்திப் பழம் கொடுக்க வேண்டும் என்று ஆசை. அவளுக்கு அது பிடிக்குமோ என்பது அவனுக்குத் தெரியவில்லை. அவனுக்குப் பிடித்தது நிச்சயம் அவளுக்கும் பிடித்ததாகத்தான் இருக்க வேண்டும். இன்று எப்படியும் அவளுக்கு அந்தப் பழத்தைக் கொடுத்துவிட வேண்டும் என்று நினைத்தான். பூ முட்கள் அவள் அழகிய கைகளில் ஒட்டாதபடி எல்லாவற்றையும் சுத்தமாக நீக்கி விட வேண்டும். ஆனாலும் அவளுக்கு அதைத் தின்னத்தெரியுமா? சந்தேகம்தான். அதுவும் ஒரு வேடிக்கை தானே!

ஆரம்ப நாட்களில் பழத்தின் உள்ளே இருக்கும் முள் அவன் நாக்கைக் குத்தியிருக்கிறது. இப்பொழுது படாமலே லாகவமாகப் பழத்தைச் சாப்பிடப் பழக்கமாகி விட்டது. அவள் நிச்சயம் முள்ளைக் குத்திக் கொள்வாள். ‘‘ஆ’’ என்று கைகளை உதறிக் கொள்வாள். அப்பொழுது தன் முகத்தில் அசடு வழியாமல் சமாளித்துவிட வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டான். முகத்தில் அனுதாபத் தைக் காட்ட வேண்டும். ‘‘ஐயோ! உனக்குச் சப்பாத்திப்

பழம் சாப்பிடத் தெரியாதா? சாப்பிடத் தெரியும்னு நான் நெனச்சேன். என்னை மன்னிச்சுடு!'' என்று சொல்லிவிட வேண்டும். அப்பொழுது அவள் சப்பாத்திப் பழம் சாப்பிடத் தெரியாததற்காக வெட்கப்படுவாள். பழத்தால் சிவந்த உதடுகளை மலர்த்திச் சிரிப்பாள். கொஞ்சம் அசடு வழியத்தான் செய்யும். இருந்தாலும் அது அவளுக்கு அழகாகத்தான் இருக்கும்.

கைக்கு எட்டுகிற தூரத்திற்குத் தலை வணங்கி வந்த பழம் முள்ளிலிருந்து வழுக்கிக் கொண்டு ஓடியது. அவளைத் திரும்பிப் பார்த்தான். அவள் சிரித்துக் கொண்டிருந்தாள். அவனைக் கிண்டல் பண்ணுகிறாள் போலும். அதுவும் அவனுக்கு மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. இந்த முறை எப்படியும் பழத்தைப் பறித்துவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

பை எடுத்துக் கொள்ளாமல் வந்தது இப்பொழுது தவறாகத் தெரிந்தது. சின்னப் பிள்ளை போலப் பையில் புத்தகங்களை எடுத்துப் போகக்கூடாது என்பதற்காகப் புத்தகங்களைக் கைகளிலேயே அணைத்துக் கொண்டு போகப் பழகிவிட்டான். பையிருந்தால் பையைப் போட்டே இதைப் பறிக்கலாம். முட்கள் பையில் மாட்டிக் கொண்டதும் இழுத்துப் பழத்தைப் பறித்து விடலாம்.

கைக்குட்டை உபயோகப்படுத்த ஆரம்பித்திருந்தது ஞாபகத்துக்கு வந்தது. கைக்குட்டையின் ஒரு முனையைச் சுழற்றி வீசிப் பழத்தின்மீது போட்டு இழுத்தான். பழம் கிட்டத்தில் வந்தது. மூங்கில் முள்ளால் சப்பாத்தியை வளைத்துப் பிடித்துக் கொண்டு பழத்தைப் பறித்து விட்டான். சிந்தனையை ஒருமுகப்படுத்தியிருந்தால் இத்தனை நேரம் எல்லாப் பழங்களையுமே பறித்திருக் கலாம். அவள் விட்டால் தானே! என்றாலும் அது இனிமையாகத்தான் இருந்தது. காதல் என்றாலே இனிமை தானோ?

பழத்தின்மேல் இருக்கும் பூ முட்களை அப்புறப் படுத்த வேண்டும். மிகவும் நுட்பமான முட்கள். கண்ணுக் குத் தெரியாமல் கைகளில் ஒட்டிக்கொள்ளும் குணம் உடையவை. நடு நாயகமாக ஒரு பெரிய முள். அதைச் சுற்றி இந்த அற்பங்கள். இப்படிப் பழத்தின் தலையைச் சுற்றி நாலைந்து இடங்களில். ராஜாவைப்போல் பழத்துக்குள்ளே பதுங்கிக் கொண்டிருப்பது ஒன்று. அது கடைசி எதிரி. அதுதான் அவள் நாக்கைக் குத்தப் போவது. இப்படி நினைத்தது அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. இன்னும் சில நிமிஷங்களில் அது நிகழப் போகிறது. அவளைத் திரும்பிப் பார்த்துக் கொண்டான். அவனையே அவள் கவனித்துக் கொண்டிருந்தாள்.

பெரிய முட்களை விரல்களால் ஆட்டி எடுத்துவிட்டு, பூ முட்களைக் கீழே உட்கார்ந்து கல்லில் தேய்த்து அப் புறப்படுத்த ஆரம்பித்தான். என்றையும்விட கொஞ்சம் கவனமாகவே அவற்றை அப்புறப்படுத்திக் கொண் டிருந்தான்.

காதலின் குணங்களை நினைத்துப் பார்ப்பதற்கு அவனுக்கு ஆசையாக இருந்தது. அவளை நினைத்துக் கொண்டால் இனம் புரியாத இன்பம். இத்தனை நாட்கள் இல்லாமல் அது எப்படித் திடீர் என்று வந்து குதித்தது என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவளைப் பற்றிப் பிறரிடம் பேசிவிடவேண்டும் என்ற உந்துதல் சில நாட்களாக ஏற்பட்டிருந்தது. அதுவும் ஏன் வந்தது? எதற்காக அப்படி வரவேண்டும் என்பது அவனுக்குப் புதிராகவே இருந்தது. அந்த எண்ணம் இன்று கொஞ்சம் தீவிரமாகவே இருப்பதை நினைத்தான். இன்று அதை அடக்க முடியாமலே போயிற்று. பலமுறை அடக்கிப் பார்த்து அதுவும் நன்றாக இருப்பதாக ஓர் உணர்வு. அடக்காமல் சொல்லி விடுவது இன்னும் நன்றாக இருக்கும்போல் தோன்றியது.

வகுப்பறையில் பக்கத்து மாணவனிடம் அதைச் சொல்லியே விட்டான். அவளுடைய அழகையெல்லாம் வர்ணித்தான். ''நான் அவளைக் காதலிக்கிறேன்'' என்று சொன்னபோது மனதில் நிகழ்ந்த மாறுதல்களை அவனுக்ுச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் எல்லாவற்றையும் விட அது இன்பமாக இருந்தது மட்டும் தெரிந்தது. சக மாணவனுக்கு இவனைவிட மூன்று வயது அதிகம் இருக்கலாம். பதினேழு அல்லது பதினெட்டு இருக்கலாம். கொஞ்சம் மக்குதான். எப்படி இருந்தால் என்ன? விஷயத்தைச் சொல்வதற்கு ஒரு ஆள் கிடைத்தானே? ''டேய் பயலே... காதலாடா கேக்குது காதல்... பயலே மூணு எலைடா அந்தக் குட்டியா?... ஷோக்கான குட்டிடா!'' என்று அவன் சொல்லவும் இவனுக்கு வேதனையாகப் போய்விட்டது. அவளைக் குட்டி என்றானே, அதுதான் இவனுக்கு வேதனை. அவனிடம் சண்டைக்குப் போய்விட முடியாது. வகுப்பில் எழுந்து கலாட்டா செய்து விட்டாலும் செய்து விடுவான். அதனால் அமைதியாக இருந்துவிட்டான். இப்பொழுது நினைத்துக் கொண்டதும் அவனுக்குச் சிரிப்பு வந்தது.

முள் நீங்கிப் பழம் தயாராகி விட்டது. அவள் அங்கு நின்று அவனைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவனுக்குப் பெருமிதமாக இருந்தது. பழத்தைக் கொடுக்க ஒரு சந்தர்ப்பம் வேண்டும். யாரும் பார்க்காமல் கொடுத்து விட வேண்டும். அதைத்தான் அவள் விரும்புவாள் என்று நினைத்தான்.

யாராவது தங்களைப் பார்க்கிறார்களா என்று பார்த்துக் கொண்டான். தெரு முனையில் சில மாணவர்கள் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் போன பின்பு கொடுப்பதே நல்லது என்று தீர்மானித்துக்கொண்டான்.

அடிக்கடி அவர்களைத் திரும்பிப் பார்த்துக் கொண்டான். அவர்கள் நெருங்கிக் கொண்டிருந்தனர். மாணவர்களுக் கிடையில் ‘ஹீரோ’ என்று அழைக்கப் பட்டவனைச் சுற்றி முன்னும் பின்னுமாக ஐந்தாறு பேர் வந்து கொண்டிருந்தார்கள். எப்பொழுதுமே அவனைச் சுற்றி ஒரு கூட்டமே உலவிக் கொண்டிருக்கும். அவனைக் கண்டாலே இவனுக்குப் பிடிப்பதில்லை. அந்தக் கூட்டம் போகிற வரையில் ஒதுங்கி நிற்பது நல்லது என்று சந்தின் வலது புறமாகச் சுவரோரம் போய் நின்று கொண்டான். இப்பொழுது அவள் அவன் பார்வையிலிருந்து மறைந்து இருந்தாள். அவள் பார்வையிலிருந்து மறைந்து இருந்தது அவனுக்கு வருத்தமாகவே இருந்தது.

அந்தத் தடியன் இந்த நேரம் பார்த்து வந்து தொலைத்தானே! அவன் காதலிக்காத பெண்களே அந்த ஊரில் இல்லை. அவன் கண்ணில் பட்ட அத்தனை பேரை யுமே அவன் காதலித்தான். அதற்காக எத்தனையோ முறை அவன் அடி வாங்கியிருக்கிறான். என்றாலும் அவன் காதலிப்பதை நிறுத்திவிடவில்லை. தான் காதலிப்பது அவனுக்குத் தெரியாமல் இருப்பதே நல்லது என்று நினைத்தான். இன்னும் கொஞ்சம் தள்ளிப் போய் நின்று கொண்டான்.

அவர்கள் சந்து திரும்பி அவன் பக்கமாகவே வந்து கொண்டிருந்தனர். அவர்களை அப்படியே நசுக்கிவிட வேண்டும்போல் இருந்தது. இப்பொழுது பக்கத்து மாணவனும் அவர்களில் ஒருவனாக இருந்ததைக் கண்டான். அங்கிருந்து நழுவி விடுவதே நல்லது என்று நினைத்தான். சந்தோடு மெல்ல நடக்கத் தொடங்கினான். அவளை விட்டுப் போவதைவிட வேதனை இவனுக்கு வேறெதுவும் இல்லை.

“டேய் காதல் மன்னா!” இது பக்கத்து மாணவனின் குரல்தான். அவர்கள் வருகையில் அவனுக்கு விபரீதம் தட்டியது. நிச்சயம் அந்தத் தடியனுக்கு விஷயம் எட்டி யிருக்க வேண்டும். என்ன செய்வது என்று தெரிய வில்லை. திடீரென்று வேகமாக ஓடத் தொடங்கினான்.

“டேய் புடிடா விடாதே!” என்று அந்தத் தடியன் சொன்னதைத் தொடர்ந்து எல்லோரும் தடதட என்று துரத்திக் கொண்டு வந்தது தெரிந்தது. மூச்சைப் பிடித்துக்கொண்டு ஓடினான். எப்படியாவது அவர்கள் பிடியிலிருந்து தப்பித்துக்கொண்டு ஜன நடமாட்டம் உள்ள கடைத்தெருவுக்கு ஓடி விடுவதே அவன் நோக்கம். ஆனால் அவர்கள் அவனைப் பிடித்துக்கொண்டார்கள்.

“டேய்... இழுத்துக்கிட்டு வாங்கடா” என்று சந்து முனையில் நின்றுகொண்டு அவன் கத்தினான். அவனை நோக்கி இவனை இழுத்துக்கொண்டு போனார்கள். அவளுடைய பார்வைக்கு எதிரில் அவமானப்படப் போவதை நினைக்கும் போது அழுகையாக வந்தது.

“ராஜாவை ராணிக்கு எதிரிலே கொண்டாங்கடா, மகுடாபிஷேகம் செஞ்சுடுவோம்!” என்றான் அவன்.

சப்பாத்திப் புதருக்கருகில் அவனைக் கொண்டு போனார்கள். சப்பாத்தி முட்களைவிட அவர்கள் கொடிய வர்களாகத் தெரிந்தார்கள். இப்பொழுது ஜன்னலை நிமிர்ந்து பார்த்துக்கொண்டான். அவள் அங்கு இல்லை. இது அவனுக்குக் கொஞ்சம் நிம்மதியாக இருந்தது.

“காதல் மன்னன் என்னடா சொல்றாரு... ராணியை நெனச்சு உருகுறாரா?” மார்புக்கு நேராகச் சட்டையை இரு கைகளாலும் பிடித்துக்கொண்டு இவனைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். “காதலாபா... காதல்”

சட்டையை இரண்டு தாராகக் கிழித்துவிட்டான். அதற்குள் ஒருவன் இவன் புத்தகங்களைப் பிடுங்கி விசிறி எறிந்தான்.

"காதல் கத்தரிக்காயெல்லாம் இனிமே செடியிலே தான்... தெரிஞ்சுதா... உம்... ஓடு... புத்தகத்தைப் பொறுக் கிட்டு ஓடு!" அதற்கு மேல் அவன் அங்கு நிற்கவில்லை. அவனைத் தொடர்ந்து எல்லோரும் சந்து வழியாகப் போனார்கள்.

இவன் மட்டும் அழுதுகொண்டே நின்றான். அவர்கள் போன பிறகு புத்தகங்களைப் பொறுக்கிக்கொண்டு கிளம்பினான். விழிகளைத் துடைத்துவிட்டுக் கொண் டான். அவள் வீட்டுப் பக்கமாகப் போவது அவனுக்கு அவமானமாக இருந்தது. வீட்டுக்குப் போவதற்கு அது தான் வழி அவனுக்கு. இப்பொழுது எப்படியாவது அவள் பார்வையிலிருந்து தப்பிவிட வேண்டும். சட்டையைச் சரிசெய்து கொண்டான். இரண்டு பிளவுகளாக அது தொங்கிக் கொண்டிருந்தது தலையைக் குனிந்து கொண்டே நடந்தான். அவள் வீட்டைக் கடந்து போய் விட வேண்டும். தலை நிமிரவில்லை. வேகமாக நடந்தான்.

அவள் வீட்டைக் கடக்கிறபோது அவள் வாயிற் படியில் இறங்கி வந்து கொண்டிருந்தாள். அவமானத்தால் தான் குன்றிப் போய்விட்டதாக நினைத்தான். அவளைத் தாண்டிப்போகும் சமயம் அவன் கையை அவள் பிடித்துக்கொண்டாள். "வீட்டுக்கு வந்துவிட்டுப் போகலாம் வா!" என்று அவன் பதிலை எதிர்பாராமலே அவனை இழுத்துக் கொண்டு வீட்டுக்குள் போனாள். அங்கு ஒரு பெரியவர் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"ரொம்ப அடிச்சுட்டானுவளா தம்பி?" என்றாள் அவள்.

''என்ன, என்ன நடந்திச்சு?'' என்றார் அந்தப் பெரியவர்.

''அந்தக் காலிப் பசங்க இந்தப் பையனை அடிச்சுட்டானுங்க!'' என்றாள் அவள்.

அவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். திடீரெனத் தன்னைவிட வயதில் பெரியவளாகத் தோன்றினாள். கொஞ்சம் சப்தமிட்டே அழுதுவிட்டான் அவன்.

நகம் பட்டிருந்த மார்புக் காயத்துக்கு மருந்து போட்டு அவன் கண்களைத் துடைத்துவிட்டாள்.

''இனிமே அந்தக் காலிப் பசங்க இருக்கிற பக்கத்துலே தலை வைச்சுக்கூடப் படுக்காதே... என்ன?'' என்றாள் அவள்.

''கொஞ்சம் காப்பி குடிச்சுட்டுப் போறியா?''

வேண்டாம் என்று தலையசைத்துவிட்டு இதுவரையில் கால்சட்டைப் பையில் பத்திரமாக இருந்த சப்பாத்திப் பழத்தை எடுத்து அவளிடம் நீட்டினான். சிரித்துக் கொண்டே அதை அவள் வாங்கிக் கொண்டாள்.

அவன் வீட்டுக்குக் கிளம்பினான். ''தம்பி, பையன்'' என்ற இரண்டு வார்த்தைகளும் அவன் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தன. இருந்தால் என்ன? அவள் தன்னைக் காதலிக்கிறாள். அந்தப் பெரியவரின் கண்ணைக் கட்டிவிட அவள் செய்த சாதுர்யம்தான் அது என்று நினைத்துக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான்.

(செப்டம்பர் 1965)